பின் எனக்குக்கிடைக்கும் நற்கதி உனக்குங்கிடைக்கும். நீ என்னை நினைத்துக் கவலைப்படவேண்டாம்" என்றுகூறிப் பின்னுஞ் செபத்திலிருந்தார். உடனே அப்பெண்மணி நிகழ்ந்தசம்பவங்களை ஆராய்ந்தறிந்து தன்தாய்சொல்லியகனவு மெய்யாயிற்றென்று நினைத்து மகிழ்ந்து கடவுளைத்தோத்திரஞ்செய்து மீண்டாள்.

அருணகிரியாரைப்பிடித்திருந்த குட்டநோயும் அவருடைய செபபலத்தினாற் சிலநாட்களின்பின் நீங்கியது. தமக்கை இடையிடைவந்து அவரையுபசரித்து வேண்டியதொண்டுகளைச் செய்துபோனாள். பின்னுஞ் சிலநாட்கள்செல்ல அப்பெண்மணியும் தேகவியோகமாயினள். அருணகிரியார் அவளுக்குச்செய்யவேண்டிய கடன்களை முடித்து உலகப்பற்றை முற்றத்துறந்தாராய்க் குமரவேளைச் சுயரூபத்தோடு காட்சிதரும்படி பிரார்த்தித்துவந்தார்.

குமரவேள் ஒருநாள் மயில்வாகனத்திலிவர்ந்து அருணகிரியார்முன்னிலையிற் பிரசன்னராகித் தம்மைப்பாடும்படி கட்டளைசெய்து "முத்தைத்தருபத்தித்திருநகை" என அடியுமெடுத்துக்கொடுத்துக் கவிபாடுதற்கேற்ற அறிவுத்திறமையையும் அவர்க்குண்டாகும்படியருள்செய்து மறைந்தார்.

அருணகிரிநாதர் அன்றுமுதற் குமரவேள்மேல் திருப்புகழ் பாடிவந்தார். அவருடைய வாயினின்றுபிறக்குந் திருப்புகழைக்கேட்டமாத்திரத்திற் பலர் அவரைவணங்கி உபசரித்துவந்தார்கள். முன்னே அவருடைய துன்மார்க்கநிலையைக்கண்டு நிந்தித்தவர்களெல்லாரும் அவரது மகத்துவத்தையுணர்ந்து சீடராயினர். பல நோயாளர் அவருடையஅருளாற் சுகமடைந்தார்கள். அவரது அற்புதச்செயல்களை அவ்வூரரசனாயிருந்த பிரௌடதேவராயனுங்கேள்வியுற்றுச்சமயம்வாய்த்தபோதெல்லாம் அவரைத்தரிசித்து அவர்பாடுந் திருப்புகழைக்கேட்டுவந்தான்.

பின்னொருநாள் அருணகிரிநாதர் குமரவேள்தரிசனந்தரும்படி திருப்புகழ்பாடி அவரிடம் பிரணவப்பொருளைக்கேட்டுத் தெளிந்து தலயாத்திரைசெய்யத்தொடங்கிப் பழனிமுதலாகிய சுப்பிரமணியத்தலங்களெங்கும்போய்த் திருப்புகழ்பாடி வந்தார். இலங்கையிலும் கதிர்காமம் திருக்கோணமலை என்னும் இரண்டுதலங்கள் அவரால் திருப்புகழ்ப்பாமாலைசூட்டப்பெற்றன. தலயாத்திரைசெய்யுங்காலங்களிற்காட்டிய பல அற்புதங்களினாலும் திருப்புகழ்ப்பாக்களின் தாளம் சொற்சுவை பொருட்சுவை முதலியவற்றின் சிறப்பினாலும் தமிழ்த்தேசமுழுவதிலும் அவருக்குப் பெருங்கீர்த்தியும் சன்மானமும் உண்டாயின. இப்படியே யாத்திரையைமுடித்துப் பின்னுந் திருவண்ணாமலையில்வந்து தங்கியிருந்தார்.

அந்நாட்களில், திருமுனைப்பாடிநாட்டைச்சேர்ந்த சனியூரிற்பிறந்தவரும் வடமொழிதமிழ்மொழியென்னுமிரண்டிலும் பெரும்புலமைவாய்ந்தவரும் பாரதமென்னுங்காப்பியத்தைத் தமிழிற் பாடியவரும் வரபதியாட்கொண்டானுடைய சம்ஸ்தானவித்துவானுமாகிய வில்லிபுத்தூராழ்வார் பலவூர்களிலும்போய் ஆங்காங்குள்ள புலவர்களுடன் வாதுசெய்து அவர்களைத் தோல்வியுறச்செய்து தாம்வைத்திருந்த துறட்டுக்கோலினால் அவர்களுடைய காதையிழுத்துப்பிடித்து அரிந்துவந்தார். அந்த வில்லிபுத்தூரார் திருவண்ணாமலைக்குவந்தபோது அருணகிரியார்பாடிய திருப்புகழிலும் பலபிழைகளையெடுத்துக்கூறி அவரைவாதுக்கழைத்தார். வாதசபையில், ஒருவர்பாடுஞ் செய்யுளுக்கு மற்றவர் பொருள்சொல்லவேண்டியதென்றும் பொருள்சொல்லாதோர் தோற்றவராவாரென்றும் நிச்சயித்தனர். அப்போது அருணகிரியார் குமரவேள்மேல் கந்தரந்தாதியென்னுந் தோத்திரநூலைப் பாடத்தொடங்கினார். வில்லிபுத்தூரார் ஐம்பத்துமூன்றாஞ்செய்யுள் முடியும்வரை பொருள்கூறிவந்தார். அருணகிரியார் *அடுத்தசெய்யுளைத் தகரமெய்யொன்றேயன்றி வேறொருமெய்யும்விரவாது பாடினார். வில்லிபுத்தூரார் பொருள்தோன்றாது மயங்கி, "இக்கவி பொருளமைதியின்றி வாய்போனவாறே பாடப்பட்டது. நீர் இதற்குப் பொருள்சொல்லின் நான் தோற்றவனாவேன்" என்றார். உடனே அருணகிரியார் பொருள்கூற

---

*அச்செய்யுள் வருமாறு:—

திதத்தத்தத் தித்தக் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்ததி தித்தித்த தேதுத் துதித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே.

இதன்பொருள்: திதத் தத்தத் தித்த—திதத்தத்தத்தித்த என்னுந் தாளஅளவை, திதி—(திருநடனத்தால்) காக்கின்ற, தாதை—பரமசிவனும், தாத—பிரமனும், துத்தி தத்தி தா—படத்தையுடைய பாம்பின்இடத்தையும், தித தத்து அத்தி—நிலைபெற்றதுந் ததும்புகின்றதுமாகிய பாற்கடலையும் (பாயலாகக்கொண்ட), ததி தித்தித்ததே து—தித்திப்பானதயிரையுண்ட திருமாலும், துதித்து—துதிசெய்து (வணங்குகின்ற) [துதித்த என்பது ஈற்றுயிர்தொக்குநின்றதெனக்கொண்டு துதிசெய்கின்ற எனப் பொருள்கூறினுமாம்], இதத்து ஆதி—இன்பரூபியான முதல்வரே, தத்தத்து அத்தி தத்தை தாத—தந்தங்களையுடைய ஐராவதயானையால்வளர்க்கப்பெற்ற கிளிபோல்வாளுக்குத்(தெய்வயானைக்குத்)தொண்டரே, தீதே துதை—தீமையேசெறியப்பெற்ற, தாது—எழ்வகைத் தாதுக்களையுடைய, அதத்து உதி—மரணத்திற்சென்றேபிறந்த, தத்து அத்து—தத்துகளமைந்த, அத்தி தித்தி—எலும்புக்கூடாகிய இவ்வுடல், தீ தீ திதி—நெருப்பினாலெரியப்பெறும்நிலையில், துதி தீ—உம்மைத்துதிக்கும் புத்தியானது, தொத்தது—(உமக்கு) அடிமையாகக்கடவது.

வில்லிபுத்தூரார் வெட்கமுற்றுத் தாம்வைத்திருந்த துறட்டுக்கோலை அவர்முன் எறிந்தனர். அருணகிரியார் புலவர்களை அவமதிசெய்யாது சன்மானித்தொழுகும்படி அவர்க்குக் கற்பித்து, மிகுதிச்செய்யுளையும் பாடிமுடித்தார்.

சிலகாலங்களின்பின் சம்பந்தாண்டானென்னும்பெயருள்ள சமணனொருவன் கல்வித்திறமையும் மந்திரசித்தியுமுடையவனுய்க் கீர்த்திபெற்றுவந்தான். அவன் அருணகிரியார்மேலழுக்காறுகொண்டு அவரைநிந்தித்துவந்தான். நிந்தித்தபோதும் சனங்கள் அவர்மேல்வைத்த மதிப்பும் நம்பிக்கையும் குறைந்தில. பின் அவ்வூரரசனோடு நண்புபூண்டு, ஒருநாள் அவனிடம்போய் "நான் தேவியை உமக்குநேரே காண்பிப்பேன். அருணகிரி தனது வழிபடுகடவுளாகிய குமரவேளை அவ்வாறே உமக்குக்காண்பிக்கவேண்டும். காண்பிக்காதவரெவரோ அவரை இவ்வூரினின்று துரத்துக" என்றுகூறினன். அரசனும் அதற்கிசைந்து அருணகிரியாருக்கறிவித்துத் தினத்தை நியமித்தான். குறித்ததினத்திற் குறிக்கப்பட்டஇடத்தில் மூவரும் வந்துசேர்ந்தனர்; சம்பந்தாண்டான் தேவியை வழிபட்டு அரசனுக்குக்காட்சிகொடுக்கும்படிவேண்டத் தேவி மறுத்துச்சென்றனள். ஆயினும் அந்தச்சமணனுடைய கேள்விப்படி தனது புதல்வராகிய குமரவேளை மடியிலிருத்திக்கொண்டாள். அருணகிரியார் தம்பத்தின்மேற் குமரவேள் காட்சிகொடுப்பாரென்று அரசனுக்குக்கூறித் திருப்புகழ்பாடினர். பாடியும் குமரவேள் வெளிப்படவில்லை. பின் அருணகிரியார் பகைவன்செய்த சூழ்ச்சியை ஞானத்தாலறிந்து குமரவேளைப் பலமுறையிரந்துபாடி மயிலையுந் துதித்தனர். மயில் அருணகிரியாருக்குப்பரிந்து தேவிமுன்சென்று தோகைகளைப்பரப்பி அழகுற ஆடிற்று. தேவி மயிலினடனில் தமதுமனத்தைச்செலுத்திக்கொண்டிருந்தாள். முருகவேள் அச்சமயத்தில் மடிவிட்டிறங்கி மயிலிவர்ந்து தம்பத்தின்மேல் தோற்ற, அருணகிரியார் அரசனுக்குக்காட்டினர். அரசனும் தனக்குக் கடவுளைக் காணும்பாக்கியங் கிடைத்ததேயென்று ஆனந்தித்துத் தரிசித்துத்துதித்தான். [குமரவேள் தூணின்மேல்வெளிப்பட்டு அநுக்கிரகித்தஉருவம் இப்போதும் கம்பத்திளையனுரென்னும் பெயருடன் வழங்குகின்றது.]

அதன்மேல் அரசன் சம்பந்தாண்டானை ஊரினின்றகற்றினனாயினும் அவனுடையசூழ்ச்சியினுற் சிலநாளின்பின் அவனுக்கு நண்பனுகி அவனுடைய தூண்டுகையினுல் தேவலோகத்திலுள்ள பாரிசாதமலரைக்கொணர்ந்துதரும்படி அருணகிரியாரை வேண்டினன். அருணகிரியாரும் சம்பந்தாண்டானுடைய சூழ்ச்சியிதுவென்றறியாதவராய் அதற்குடன்பட்டுத் தமதுசரீரத்தைக் கோயிற் கோபுரத்தின்மேலுள்ள ஓரிடத்திற் சேமித்துவைத்துக் கிளியுரு

வாகித் தேவலோகஞ்சென்று இந்திரனுடைய அநுமதிபெற்றுப் பாரிசாதமலரைத் தமது கிளியுருவத்தின் மூக்கினாற்கொய்துகொண்டு மீண்டுவந்தார்.

இதற்கிடையிற் சம்பந்தாண்டான் இவருடையசரீரம் கோபுரத்தில் மறைக்கப்பட்டிருப்பதையறிந்து, அருணகிரி பாரிசாதமலர்கொண்டுவர இயலாமையினால் உயிரைவிட்டானென்று வெளிப்படுத்தி, அவ்வுடலைத் தகனஞ்செய்வித்தான்.

மீண்டுவந்த அருணகிரியார் தமதுசரீரந் தகிக்கப்பட்டதை யறிந்து குமரவேளின்செயலேயென்றுநினைத்துக் கிளியுருவத்தோடு அக்கோபுரத்திற்றங்கியிருந்தார். அவர்கொண்டுவந்த பாரிசாதமலரின் மணம் அவ்வூர்முழுதும் பரவியது. அரசன் அருணகிரிநாதர்கொணர்ந்த மலரின்மணமே யிதுவென்றுதுணிந்து அவருடைய உடலைத் தகனஞ்செய்வித்ததற்காகத் துக்கமுற்று அவர்முன்னிலையில் வந்து புலம்பிக்கொண்டுநின்றான். அருணகிரியார் “அரசனே! நீ கவலைப்படவேண்டாம். என்னுடைய மானுடயாக்கையினின்று இது நமக்குச் சுகத்தைத்தருகின்றது. இவ்வடிவத்தோடு யான் கடவுளைப்பாடுவேன்” என்றுகூறி அரசனைத்தேற்றியனுப்பினார்.

பின் அருணகிரிநாதர் கிளியுருவத்துடன் பலகாலமிருந்து பலதோத்திரங்களைப்பாடிக் குமரவேளுடைய பேரானந்தசுகவாழ்வைப்பெற்றார்.

கிளியுருவத்தோடிருந்தே இந்தக் கந்தரநுபூதியையும்பாடினாரென்பர் சிலர். திருவகுப்பு கந்தரலங்காரம் முதலியவைகளும் இவராற் பாடப்பட்டனவாயிருக்கின்றன.

இவரைச் சிலர் பட்டினத்தடிகளின்புதல்வரென்று எழுதியிருக்கின்றார்கள். பழைய அரசர்களதும் வித்துவான்களதும் சீவியகாலத்தை நுட்பமாய் ஆராய்கின்ற சரித்திரகாரர்சிலர் பட்டினத்தடிகள்காலத்திலிருந்து அருணகிரியார்காலம் ஏறக்குறைய நானூறுவருடங்களுக்குப் பிந்தியிருக்கலாமென்று அநுமானிக்கின்றார்கள்; ஆதலின் இவரைப் பட்டினத்தடிகளின்புதல்வரெனக் கூறுவது பொருத்தமற்றதாயிருக்கிறது.

உ

சிவமயம்.

# கந்தரநுபூதி உரை.

## காப்பு.

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

**இதன்பொருள்:** நெஞ்ச கன கல்லு நெகிழ்ந்து உருக—(தம்மைத்தியானிப்பவர்களுடைய)மனமாகிய உரத்தகல்லானது இளகி உருகாநிற்க, தஞ்சத்து அருள்—பற்றுக்கோடாய் அருள்செய்கின்ற, சண்முகனுக்கு—முருகக்கடவுளைக்குறித்து, இயல் சேர் செம் சொல் புனை மாலை—இயல்புபொருந்திய செவ்விய சொற்களினாற்றொடுக்கப்பெறும் மாலையாகிய இந்நூல், சிறந்திட—இனிதுநிறைவேறும்படி, பஞ்ச கர ஆனை—ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக்கடவுளுடைய, பதம்—திருவடிகளை, பணிவாம்—வணங்குவோம்.

நெஞ்சமென்பதில் அம்மும் கல்லு என்பதில் உவ்வும் சாரியைகள். உருக அருள் சண்முகனுக்கு புனை மாலை என இயையும். கன-உரிச்சொல். நெகிழ்தல்-மிருதுத்தன்மையைப்பெறுதல். அன்பில்லாமைதோன்ற மனத்தைக் கனகல் என்றார். நெஞ்சம் ஆகுபெயர். சண்முகன்-ஆறுமுகங்களையுடையான். சொற்களுக்கு இயல்பு-பெயர் வினை இடை உரி முதலிய தன்மைகள். செம்மை-சந்தம் பொருளமைதி முதலியவற்றின் சிறப்பு. செஞ்சொற்புனைமாலை பஞ்சக்கரவானை என்பன விசேடணத்தால் விசேடியப்பொருளைச் சுட்டி நின்றன.

---

## நூல்.

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

இ—ள்: தேடும் கயமா முகனை—தேடிவந்தெதிர்த்த கயமுகாசுரனை, செருவில்—போர்செய்யும்பொழுது, சாடும்—அழித்த, தனி யானை—ஒப்பற்ற விநாயகக்கடவுளுடைய, சகோதரனே—தம்பியே, ஆடும் பரி வேல் அணி சேவல் என—(கார்காலத்தில் தோகையைவிரித்து) ஆடுகின்றமயில்வாகனமென்றும் வேற்படையென்றும் அழகிய சேவற்கொடியென்றும், பா

மெம் பணியே—(உமது உபகரணங்களைத்) துதிக்கின்ற தொண்டையே,பணி ஆ—(தினந்தோறுஞ் சிறியேன்செய்யுந்) தொழிலாக, அருள்வாய்—அருள் செய்வீர்.

முந்திய ஏ—பிரிநிலை. ஆக என்பதன் ஈறு தொக்கது. சாடும் சகோதரன் என இயைத்து, கயமாமுகன் என்பதற்குத் தாரகாசுரனெனப்பொருள் கூறினுமாம். (௬)

உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ
எல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே.

இ—ள்: உல்லாச—ஆனந்தத்தைத்தருவதும், நிர் ஆகுல—துன்பத்தை யொழிப்பதுமாகிய, யோகவித—யோகவகைகளினாலே, சல்லாப—அடியார்கள் அளவளாவுதலை, விநோதனும்— பொழுதுபோக்காகவுடையவரும், நீ அலையோ—நீரல்லீரோ (ஆதலால்), முருகா—முருகக்கடவுளே, சுர் பூபதியே—தேவசேனாபதியே, எல்லாம் அற—(மாயையின் வலியால் என்னுடையனவென்று எண்ணியிருக்கும்) எல்லாப்பொருளும் என்னுடையனவாகாதொழிய, என்னை இழந்த நலம்—சீவான்மாவாந்தன்மையை நீங்கிப் பரமான்மாவாந்தன்மையை யடையுஞ்சிறப்பை, சொல்லாய்—உபதேசிப்பீர்.

உம்மை எச்சம். யோகாங்கங்கள் எட்டாதலின் யோகவிதம் என்றார்; அவை, இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதிஎன்பனவாம். முந்திய இரண்டையுந்தவிர்த்து ஆறாகக்கூறுவாருமுளர். இழந்த-காலவழுவமைதி. எல்லாமறுதல் என்னையிழத்தல் முதலியவற்றின் விரிவைச் சங்கராசாரியசுவாமிகளருளிச்செய்த நிர்வாணதசகம் நிர்வாணஷட்கம் ஆன்மபஞ்சகமுதலிய தோத்திரங்களாலறிக. (உ)

வானோ புனல்பார் கனன்மா ருதமோ
ஞானோ தயமோ நவினான் மறையோ
யானோ மனமோ வெனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே.

இ—ள்: சண்முகனே—ஆறுமுகக்கடவுளே, வானோ—ஆகாயமோ, புனலோ—நீரோ, கனலோ—நெருப்போ, மாருதமோ—காற்றோ, ஞான உதயமோ—ஞானத்தினுடைய தோற்றமோ, நவில் நால் மறையோ—ஓதப்படுகின்ற நான்கு வேதங்களோ, யானோ—ஆன்மாவோ, மனமோ—(அந்தக்கரணங்களுளொன்றாகிய)மனமோ, எனை ஆண்ட இடம் தானோ—(குருவடிவத்துடன்வந்து) என்னை அடிமைக்கொண்ட இடமேயோ, பொருள் ஆவது—உண்மைப்பொருளாகச் சொல்லத்தக்கது.

அகண்டாகாரமாய் நிற்றலின் இறைவனிலக்கணத்தை வரையறுத்தல் இயலாதென்பதாம்.

ழு எதிர்மறை; புனல் முதலியவற்றிற்கு மியைக்கப்பட்டது. எழு தாக்கேள்வியாதலின் 'நவிஞன்மறை' என்றார். மறையென்பது பொருளான் மறைந்திருப்பதெனப் பொருள்படும். சிலர் நான்குவருணத்துப் பெண்களுக்கும் சூத்திரருக்கும் மறைக்கப்படுவதெனவும் பொருள்கூறுகின்றார்கள். வேதம் ரஜஸ்வலை பதிதர் முதலாயினோர்க்கே மறைக்கற்பாலது. நான்காம்வருணத்தார் ஓதன்முதலியவற்றிற்கதிகாரமில்லாதவரேயன்றி அந்தணராதியோரோதுந்தொனியைச் செவிப்படுத்தற்குத்தானும் விலக்கானவரல்லர். சிலநூல்களில் கேட்டுநிற்பாராய சூத்திரர்க்குத் தண்டனைவிதித்ததும் பிறவும் அவர்கேட்டுநிற்றலின் அநுவசியகத்தையும் அதனால் ஓதுவார்க்கு ஓதுந்தொழிலிற் சிந்தைசெல்லாமை முதலிய பங்கமுண்டாதலையுங் குறித்தேயாம். அந்தணர்முதலிய மூவருணத்துப்பெண்கள் வேதமந்திரங்களினாலே விவாக முதலிய கிரியைகளிற் சம்ஸ்கரிக்கப்படுவதும், வேதமந்திரத்தால் தீவேட்டல் முதலிய கிரியைகளைக் கணவர்செய்யும்போது உடனிருக்கவேண்டுவதும், அப்பெண்கள் இறந்தகாலத்திலும் வேதமந்திரங்களாலே கிரியைசெய்யப்படுதலும், விதியும் வழக்குமாயிருத்தலின், அவர்களும்வேதத்திற்கு விலக்கானவரல்லர். அட்டிற்றொழில் நூல்நூற்றல் முதலியன ஆடவனுக்கு விதிக்கப்படாமையும் கல்வித்தொழில் பெண்கட்கு விதிக்கப்படாமையும் ஒத்தனவாம். அவர்கள் விதிக்கப்படாத தொழிலைச்செய்யவேண்டியதாய்வந்த ஆபத்துக்காலத்தில் நியதியன்று. எனையாண்ட இடமென்றது திருவண்ணாமலையிற் கோபுரத்தினின்று குதித்தபோது குமரவேள் ஏந்திக்காத்து அடிமைக்கொண்ட இடத்தைச் சுட்டியது. (ரு)

வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

இ—ள்: கிளை பட்டு எழு சூர் உரமும்—மிகுந்த சுற்றத்தையுடையவனும் கிளர்ந்த சூரபன்மனது மார்பும், கிரியும்—கிரவுஞ்சமலையும், தொளைபட்டு உருவ—துளைக்கப்பட்டு ஊடுருவும்படி, தொடு—ஏவிய, வேலவனே—வேற்படையையுடைய கடவுளே, வளை பட்ட கை மாதொடு—வளையலையணிந்த கைகளையுடைய மனைவியும், மக்கள் எனும்—மக்களும் என்று சொல்லுகின்ற, தளை பட்டு—பந்தத்தில் அகப்பட்டு, அழிய தகுமோ தகுமோ—நான் கெடத்தகுமோ கெடத்தகுமோ.

தகுமோ தகுமோ-இரக்கத்தில்வந்த அடுக்கு. தொளை-துளை யென்பதன்விகாரம். கிளை-மாவடிவத்தின் கிளைகளெனினுமாம். (சு)

மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
அகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே.

இ—ள்: மகா மாயை களைந்திட வல்ல பிரான்—பெரிதாகிய அஞ்ஞானத்தைநீக்கவல்ல கடவுளாகியமுருகவேளினது, முகம் ஆறும்-ஆறுதிருமுகங்களும், மொழிந்தும்—உண்மைநிலையை வெளிப்படுத்திய பின்னும், அகம் ஆடை மடந்தையர் என்று அயரும்—வீடு உடை பெண்கள் என்று நினைத்துக்கொண்டு அவற்றைத் தேடியுழலுகின்ற, சக மாயையுள்—பிரபஞ்சமென்னும் மாயையிலே, நின்று—மனத்தைச்செலுத்தி, தயங்குவது—வருந்துதலை, ஒழிந்திலனே—யான் தவிர்த்திலேனே, (என்புத்தி சென்றவாறென்னை னத்தன்னையிழித்துக் கூறியவாறு).

மொழிந்துமென்பதில்உம்மை சிறப்பு. ஏ-முன்னையது இழிவு; பின்னையது ஈற்றசை. மகமாயை-குறுக்கல் விகாரம். கடவுளிடத்தேஅன்புசெலுத்தாதுபிரபஞ்சத்தைப் பற்றிநிற்றலே ஈண்டு மாயையெனப்பட்டது. அது பெருமுயற்சிசெய்தபோதும் ஒழியாதுபற்றிநிற்றலின் 'மகமாயை'என்றார்.()

திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே.

இ—ள்: பணி யா என—(யாம் உமக்குச் செய்யவேண்டிய) வேலையென்றுவினவி, வள்ளி பதம் பணியும்—வள்ளிநாயகியின் பாதங்களைப் பணிந்த, தணியா அதி மோக—குறையாத பெருமோகத்தையுடைய, தயாபரனே—கடவுளே, திணி ஆன மனோ சிலை மீது—திண்மையிருந்த என்மனமாகிய கல்லின்மேல், உன தாள் அணி ஆர் அரவிந்தம்—உமதுபாதங்களாகிய அழகுநிறைந்த தாமரைமலர்கள், அரும்பும் அதோ—தோன்றப்பெறுமோ. [சிறியேன் பத்தியில்லாதேனுயினும் அருள்செய்து காப்பீர் என்பதாம்].

மனோசிலை-வடசொன்முடிபு. அது சாரியை. ஓ-எதிர்மறை. தயாபரன்-கருணைசெய்தலையே தொழிலாகவுடையான். (சு)

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதா ணினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

இ—ள்: கெடுவாய் மனனே—கெடுதற்குமுயலுகின்ற என்மனமே, கதி கேள்—உய்யும்வழியைச் சொல்வேன் கேட்பாயாக, கரவாது இடுவாய்—(இரப்பவர்களுக்குக்கொடுக்கத்தக்கனவற்றை) இல்லையென்றொளித்து வையாமற் கொடுப்பாய், வடி வேல் இறை தாள் நினைவாய்—கூர்மையான வேற்படையையுடைய முருகக்கடவுளின் திருவடிகளைத் தியானிப்பாய், நெடு வேதனை தூள்பட சுடுவாய்—நெடுங்காலமாகத் தொடர்ந்துவருகிறபிறவித்துன்பத்தைக் கெடும்படி அழிப்பாய், வினை யாவையும் விடுவாய் விடுவாய்—தீவினையெல்லாவற்றையும் செய்யாது விடுவாய் விடுவாய்.

பின்னைய ஏகாரங்கள்-அசை. படுவாய்-எதிர்காலத்தெரிநிலைவினையா லணையும் பெயரின் விளி; அது வடமொழியிற்போல மனனே என்னும் விளிக்கடையாயிற்று. மனன்-போலி. கருவிலிருக்கும்போதும் பிறக்கும்போதும் பிறந்தபின்னும் பலவகையான துன்பத்தையே தருதலின் பிறவியை வேதனையென்றார். வினையாவையுமென்றது இருவினைகளையுமெனினுமாம். ()

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே.

இ—ள்: குமரன்—குமரக்கடவுளும், கிரிராச குமாரி மகன்—இமயமலையரசனது புத்திரியின் புதல்வரும், சமரம் பொரு தானவ நாசகன்—போரைச்செய்த சூரபன்மன்முதலிய அசுரர்களையழித்தவரும் (ஆகிய முருகவேள்), அமரும் பதி—யானிருக்குமூரும், கேள்—சுற்றமும், அகம் எனும்—வீடும் என்று சொல்லப்படுகின்ற, இ பிமரம் கெட—இந்தப்பிராந்தி கெடும்படி, மெய்ப்பொருள் பேசியவா—உண்மைப்பொருளை அடியேனுக்குபதேசித்ததன்மை (புகழத்தக்கது).

ஆம்-அசை. பேசியவாறு என்பதில் ஈற்றுயிர்மெய்தொக்கது. பிரமம் என்பது பிமரமென எழுத்துமாறிற்று. பிரமம்-ஒன்றனியற்கையை மற்றொன்றாயுணர்ந்து அலைதல். நிலையற்றனவும் துன்பத்தைத்தருவனவுமாகிய ஊர் முதலியபொருள்களை நிலையுள்ளனவுஞ் சுகத்தைத்தருவனவுமாக நினைத்தல் ஈண்டுச்சுட்டப்பட்டது. மெய்ப்பொருளென்றது ஞானநிலையை; பிரணவப் பொருளையெனினுமாம். (௪)

மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் படரொன் றொழிவேன்
தட்டூ டறவேல் சயிலத் தெறியுந்
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே.

இ—ள்: தட்டு ஊடு அற—இடையே தடையொன்றுமின்றாக, வேல்—வேற்படையை, சயிலத்து எறியும்—கிரவுஞ்சமலையின்மேலெவிய, நிட்டூர—கோபக்குணத்தையுடையவரே, நிராகுல—துன்பமற்றவரே, நிர்ப்பயனே—பயமில்லாதவரே, மட்டு ஊர் குழல் மங்கையர்—வாசனைபொருந்திய கூந்தலையுடைய பெண்கள்மேல்வைத்த, மையல் வலை பட்டு—மோகமாகிய வலையிலகப்பட்டு, ஊசல் படும்—ஊஞ்சலைப்போல அலைகின்ற, படர்—துன்பத்தினின்றும், என்று ஒழிவேன்—எந்நாளில் யான் நீங்குவேன்.

மட்டு-ஆகுபெயர். குழற்குவாசனை, அகிற்புகை மலர்மணம் முதலியவற்றாற்பொருந்தும். மங்கையர் பருவங்குறித்தசொல்லெனினுமாம். இக்குண்டாரை மீனவிடாதுவருத்துதலின் மையலை வலையாக உருவகித்தார். (௫)

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே.

இ—ள்: தார் மார்ப—கடப்பமலர்மாலையையணிந்த மார்பினையுடையவரே, வலாரி தலை அரி எனும் சூர் மா— இந்திரனது சுவர்க்கலோகத்தை யழிப்பித்த பகைவனாகிய சூரபன்மனது மாமரவடிவம், மடிய—இருபிளவாய் விழும்படி, தொடு—எவிய, வேலவனே—வேற்படையையுடைய கடவுளே, காலன்—கூற்றுவன், கார் மா மிசை வரின்—எருமைக்கடாவாகனத்திலேறி (என்னுயிரைக்கவரும்படி) வந்தால், கலபத்து ஏர் மா மிசை வந்து—நீர் மயிலாகிய அழகிய வாகனத்திலேறிவந்து, எதிரப்படுவாய்—முற்படுவீர்.

தேகாந்தத்தில் உமது சாயுச்சியப்பேற்றைத் தந்தருள்வீரென்பதாம். கலபத்தேர் மா என்பதில் மா ஆகுபெயர். வல+அரி=வலாரி; வலனென்னு மசுரனுக்குப் பகைவன். (௫௦)

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
த்யாகா சுரலோ கசிகா மணியே.

இ—ள்: நாகாசல—தேவகிரியிலெழுந்தருளியவரே, வேலவ—வேற்படையையேந்தியவரே, நாலு கவி த்யாகா—(ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும்) நால்வகைக்கவிகளையும் பாடும்படி அருள்செய்பவரே, சுர லோக சிகாமணியே— தேவலோகத்துக்குத் தலைவரே, என் கிளை—என்னுடைய சுற்றத்தார், கூ கா என—கூ கா என்னுங் குறிப்பொலிகளுண்டாகும்படி, கூடி அழ—சூழ்ந்திருந்து அழ, போகா வகை—இறவாவண்ணம், மெய்ப் பொருள்—உண்மைப்பொருளை, பேசியவா-உபதேசித்தமை (புகழத்தக்கது).

பேசியவாறு என்பதன் ஈற்றுயிர்மெய்தொக்கது. சிகாமணி-உச்சியிலணியப்படும் மணி; ஆகுபெயர். ஞானிகள் ஏகாந்தத்திலிருந்து யோகமார்க்கத்தால் உடலைநீக்கி முத்திபெறுவதன்றி, நோய்வாய்ப்பட்டுச் சேடமீறி யறிவழிந்துகிடந்து இறப்பதில்லையாதலின் 'கூகாவெனவென்கிளைகூடியழப் போகாவகை' என்றார்.

மெய்ப்பொருளென்றதற்கு எட்டாஞ்செய்யுளிலுரைத்தாங்குரைக்க.

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
யம்மா பொருளொன் றுமறிந் திலனே.

இ—ள்: செம் மான் மகளை திருடும் திருடன்—செந்நிறத்தையுடைய மானின் புதல்வியாகிய வள்ளிநாயகியை (வேடர்சேரியினின்றும் கள்ளிர

வில்) திருடிச்சென்ற கள்வரும், பெம்மான்—பெருமானும், பிறவான்—பிறப்பில்லாதவரும், இறவான்—இறப்பில்லாதவரும் ஆகிய, முருகன்—முருகவேள், சொல் அற சும்மா இரு என்றலும்—வாய்பேசுதலில்லாமல் மௌனநிலையாயிருப்பாயென்று கட்டளைசெய்தவுடன், பொருள் ஒன்றும் அறிந்திலன்—பிரபஞ்சப்பொருளொன்றையு மறியாதவனாயினேன், அம்மா—இது பெரிய ஆச்சரியம்!

இறைவனருள்செய்தவுடன் ஐம்புலனுமொடுங்க ஆன்மதரிசனமுண்டாயிற்றென்பது கருத்து.

ஏ-ஈற்றசை. இவ்வாறு பிறசெய்யுட்கள் சிலவற்றின் உரையிலெடுத்துக்கொள்ளப்படாதனவாய் வருவனற்றிற்குமுரைக்க. மால் மகள் எனப்பிரித்துத் திருமாலின் புதல்வியெனக்கூறுவர் சிலர். திருடன்-புகழ்ச்சிக்கண்வந்த இகழ்ச்சி. (கஉ)

முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

இ—ள்: உரு அன்று—உருவப்பொருளன்று, அரு அன்று—அருவப்பொருளுமன்று, உளது அன்று—உள்பொருளுமன்று, இலது அன்று—இல்பொருளுமன்று, இருள் அன்று—இருளுமன்று, ஒளி அன்று—ஒளிப்பொருளுமன்று, என—என்றுசொல்லும்படி, நின்றது—நின்றபொருள், முருகன்—முருகவேளும், தனி வேல் முனி—ஒப்பற்ற வேற்படையையேந்திய பெரியவரும், நம் குரு என்று—எங்கள் பரமகுருவுமேயாமென்று, அருள் கொண்டு அறியார்—அவருடையகருணையைப்பெற்றறியாதவர்கள், அறியும் தரமோ—அறியக்கூடியதகுதி உளதாமோ (இல்லையே).

ஒ-எதிர்மறை வழிபாட்டின்பொருட்டு அடியார்களாற் கற்பித்துக்கொள்ளப்படும் வடிவங்கள்கூவுரினியற்கைவடிவமாகாமையின் 'உருவன்று' எனவும், எல்லாந்தாமேயாய் நிற்றலின் 'அருவன்று' எனவும், அநுமானம் காட்சி அளவை என்னும் முத்திறங்களாலும்உண்மையின்மைகளை ஆராய்பிடத்து நிச்சயந்தோன்றுதலரிதாதல்பற்றி 'உளதன்று இலதன்று' எனவும், சூரியன்முதலிய ஒளிப்பொருள்களுக்கும் உள்ளொளியாய்நிற்றலின் 'இருளன்று' எனவும், அவ்வொளியை ஊனக்கண்ணாற் காணுதலியலாமையின் 'ஒளியன்று' எனவும், இவ்வாறே மயங்கிநிற்குநிலையை அவரருளானன்றித் தெளிதலியலாமையின் 'அருள்கொண்டறியாரறியுந்தரமோ' எனவும் கூறினர். (கரு)

கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய்
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியா
மைவாய் வழிசெல் லுமவா வினையே.

இ—ள்: மனமே—என்மனமே, கைவாய் கதிர் வேல்—கையின் கண் வாய்த்த ஒளிபொருந்திய வேற்படையையுடைய, முருகன்—முருகக் கடவுளுடைய, கழல்—திருவடிகளை, பெற்று—துணையாகப்பெற்று, உய்வாய்—நீ வாழ்வாய், மெய் வாய் விழி நாசி ஒடும் செவி ஆம்—மெய்யும் வாயும் கண்ணும் மூக்கும் காதும் ஆகிய, ஐ வாய் வழி—ஐந்துபொறிகளின் வழியாக, செல்லும்— சென்றுகொண்டிருத்தலாகிய, அவாவினை—ஆசையைத்தையும், ஒழிவாய் ஒழிவாய்—விடு விடு.

மனத்தைப்பொறிவழிசெல்லாதுதடுத்துக் கடவுட்டியானத்திற் செல்லும்படி வற்புறுத்தியவாறு.

வாய்-வாயில். அடுக்கு-விரைவுகுறித்துநின்றது. ஒடு-எண். உம்-சாரியை. பொறிவழிச்செல்லும் புலன்களைந்தாதலின் ஆசையும் ஐந்தாயிற்று. ()

முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயறந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவவெண் குணபஞ் சரனே.

இ—ள்: பொரு புங்கவரும் புவியும் பரவும்-அசுரருடன்முற்காலத்திலே போர்செய்ததேவர்களாலும் பூவுலகத்தாராலும் துதிக்கப்பெற்ற, குரு புங்கவ-குருநாதரே, எண் குண பஞ்சரனே—எட்டுவகையானகுணங்களுக்கு முறைவிடமானவரே, முருகன் குமரன் குகன் என்று மொழிந்து—முருகவேளே குமாரக்கடவுளே குகமூர்த்தியே என்று உமதுதிருநாமங்களையுச்சரித்து, உருகும் செயல்— மனமுருகுகின்ற தொழிலை, தந்து—எனக்குத்தந்து, உணர்வு என்று அருள்வாய்—ஞானநிலையை எக்காலத்தில் அருள்செய்வீர்.

புவி-ஆகுபெயர். பஞ்சரம்-கூடு. சிவபிரானுக்குப் பிரணவப்பொருளை விரித்துக்கூறியதனாலும் அகத்தியருக்கும் பராசரமுனிவரது புத்திரராறுவருக்கும் ஞானோபதேசஞ்செய்தமையாலும் முருகவேளுக்குக் குருநாதனென்னும்பெயர் வழங்கிற்று. முருகன்-எக்காலத்தும் இளமைப்பருவத்தையுடையவன். குமரன்-அக்கருத்தையே யுணர்த்திநின்ற வடசொல். குகன்-அடியாருடைய உள்ளத்திலிருப்பவன். எண்குணங்களாவன தன்வயத்தனாதல் தூயவுடம்பினனாதல் இயற்கையுணர்வினனாதல் இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்றல். பேரருளுடைமை முடிவிலாற்றலுடைமை முற்றறிவுடைமை வரம்பிலின்பமுடைமை என்பன. (௩௫)

பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே.

இ—ள்: வீரா—வீரரே, முது சூர் பட வேல் எறியும் சூரா—நூற்றெட்டியுகமாகவாழ்ந்த சூரபன்மனிறக்கும்படி வேற்படையைவீசிய சூரரே,

சுர லோக துரந்தரனே—தேவலோகத்தைக்காப்பவரே, ஓரா வினையேன்—உய்த்துணர்வில்லாத பாவியேன், பேராசை எனும் பிணியில் பிணிபட்டு—பேராசையாகிய பந்தத்திலகப்பட்டு, உழலத்தகுமோ—அலையத்தகுமா.

பெருமை ஆசை என்னுஞ்சொற்கள் பேராசையெனச்சந்திபெற்றன. துரந்தரன்-பாரத்தைவகிப்பவன். (கசு)

யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனாற்
பூமேன் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே.

இ—ள்: யாம் ஓதிய கல்வியும்—நாங்கள்கற்ற கல்வியையும், எம் அறிவும்— கல்விக்கேற்ற எங்களறிவையும், பெற— பெற்றுக்கொள்ளும்படியாக, வேலவர்—முருகக்கடவுள், தாமே—தாமாகவே, தந்ததனால்—எங்களுக்கு அருளியதனால், பூ மேல் மயல் போய் அற— பிரபஞ்சத்தின்மேல்வைக்கும் ஆசையானது நீங்கிக்கெட, மெய்ப்பு உணர்வீர்—உண்மைநிலையையறியக்கடவீர், இனி—அறிந்தபின், நாமேல் நடவீர் நடவீர்—நாவின்வழியே செல்வீர் செல்வீர் (அவரைப் பாடுவீர்).

கல்விகற்றதற்கும் அறிவுமுதிர்ந்ததற்கும்பயனாகக் கடவுளை வழிபடுவீரென்பதாம். யாம் உணர்வீர் நடவீர் என்பன பத்திமிகுதியாற்பாவிக்கப்பட்ட பன்மைகள். உணர்வீர் நடவீர் என்னும் ஏவல்வினைமுற்றுக்கள் தம்மையே முன்னிலையாக்கிக் கூறப்பட்டன. யாம் என்பது தன்னொடுபிறரை யுளப்படுத்தியும் உணர்வீர் நடவீர் என்பன தன்னையும் பிறரையும் முன்னிலைப்படுத்தியும்கூறிய பன்மைகளெனினுமாம். பெற தந்ததனால் உணர்வீர் என இயைக்க. நாமேனடத்தல்-நாக்கினாற்செய்யக்கூடிய தொண்டைச்செய்தல். (கஎ)

உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வனகா வபயா வமரா
வதிகா வலசூ ரபயங் கரனே.

இ—ள்: உதியா—பிறவாத, மரியா—இறவாத, உணரா—நினைவற்ற, மறவா—மறதியற்ற, விதி மால் அறியா—பிரமதேவருந் திருமாலுந்தேடியறியாத, விமலன்—சிவபிரானது, புதல்வா—குமாரரே, அதிகா—எவரினுஞ்சிறந்தவரே, அனகா—பாவமில்லாதவரே, அபயா—அடியார்க்குப் புகலிடமானவரே, அமராவதி காவல—அமராவதிநகருக்குத் தலைவரே, சூர பயங்கரனே—சூரபன்மனுக்குப் பயத்தையுண்டாக்கியவரே.

என்னையடிமைக்கொண்டருள்க என்பது இசையெச்சம். உதியா முதலிய ஈறுகெட்டபெயரெச்சங்கள் தனித்தனி விமலன் என்பதனோடியையும். அமராவதி-சுவர்க்கலோகத்திலுள்ள இந்திரனுடைய நகரம். (கஅ)

வடிவுந் தனமும் மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா வயில்வே லரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே.

இ—ள்: அடி அந்தம் இலா—முதலும் முடிவுமில்லாத, அயில் வேல் அரசே—கூர்மைபொருந்திய வேற்படையையேந்திய கடவுளே, மிடி என்று ஒரு பாவி வெளிப்படின்—வறுமையென்றுசொல்லப்படுகிற ஒருபாவி ஒருவனிடம் தோற்றியவுடன், வடிவும்—அவனுடைய அழகும், தனமும்—செல்வமும், மனமும்—மனநிலையும், குணமும்—குணமும், குடியும்—கோத்திரமும், குலமும்—சாதியும், குடிபோகியவா—அவனைவிட்டுப் பிரிந்து போனதன்மை (பெரிய ஆச்சரியம்).

செல்வமுதலியவற்றின் நிலையாமையையுணர்த்தியவாறு. தன்னையுடையானை யிருமையினுங்கெடுத்தலின் மிடியைப் பாவியெனவும், இடமாகக்கொண்டிருந்தன பின் விட்டகலுதலின் 'குடிபோகியவா' எனவும் கூறினர். குடிபோகியவாறு என்பதில் ஈற்றுயிர்மெய்தொக்கது. (கக)

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியே
னுரிதா வுபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே.

இ—ள்: விரி தாரண விக்ரம—மிகுந்த பயங்கரமான வீரத்தையுடையவரே, வேள்—அடியாரால் விரும்பப்படுபவரே, இமையோர் புரி தாரக—தேவலோகத்தைக்காத்தவரே, நாக புரந்தரனே—தேவசேனுபதியே, அரிது ஆகிய மெய்ப்பொருளுக்கு—எவராலும் பெறுதற்கரியதான உண்மைப்பொருளையறிதற்கு, அடியேன் உரிது ஆ—சிறியேன் உரிமையுள்ளவனென்று கொண்டு, உபதேசம் உணர்த்தியவா—உபதேசஞ்செய்தது (வியக்கத்தக்கது).

உரிது-குணியைக்குணமாகக்கூறியவழுவமைதி. தாரணம்-தாருணமென்னும் வடசொல்லின் விகாரம். புரந்தரன்-இந்திரன்; ஈண்டுத் தலைவனென்னும் பொருளில்வந்தது. உணர்த்தியவாறு என்பதில் ஈற்றுயிர்மெய் தொக்கது. (உ0)

கருதா மறவா நெறிகாண வெனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே.

இ—ள்: வரதா—அடியார்க்கு வரங்களைக்கொடுப்பவரே, முருகா—முருகவேளே, மயில் வாகனனே—மயிலை வாகனமாகவுடையவரே, விரதா—முடிவுப் பொருளே, அசுர சூர விபாடணனே—அசுரகுலத்திற்பிறந்த சூரபன்மனது பகைவரே, கருதா மறவா நெறி காண—நினைப்பும் மறப்புமில்

லாத முத்திநெறியை யறியும்படி, எனக்கு—அடியேனுக்கு, இரு தாள் வனசம் தர—இரண்டு திருவடித்தாமரைகளையுங்காட்டுதற்கு, என்று இசைவாய்-எக்காலத்தில் திருவுளம் பற்றுவீர்.

விரதா அசுர என்பது தீர்க்கசந்திபெற்றது. விபாடணன்-சினேகப் பேச்சில்லாதவன். (உச)

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே.

இ—ள்: காளை குமரேசன் என கருதி—காளைபோன்ற குமாரக்கடவுளென்று சிந்தித்து, பாளை குழல் வள்ளி பதம் பணியும் வேளை—விரிந்த கமுகம்பாளையையொத்த கூந்தலையுடைய வள்ளிநாயகியின் பாதங்களை வணங்கிய முருகவேளாது, சுர பூபதி மேருவை — இந்திரனுக்கு மேருபோல்வாரது, தாளை—திருவடிகளை, பணிய—வணங்குதற்குத்தக்க, தவம் எய்தியவா—தவமானது எனக்குக் கைகூடியதன்மை(வியக்கத்தக்கது).

காளை-எருத்திளங்கன்று. மேரு- உவமவாகுபெயர். மேருமலை அசுரராலிடர்விளையுங்காலத்தில் ஒளித்திருத்தற்கு அரணாயிருப்பதுபோல, குமரவேளும் அவ்வசுரராலிடரெய்தியகாலத்தில் தேவர்க்குப் புகலிடமாதலின் 'சுரபூபதிமேரு' என்றார். வேளை மேருவை பணிய என்றது வடமொழிவழக்கு. முதல் சினையிரண்டினும் இரண்டனுருபுவிரிக்கப்பட்டிருத்தலின் முதலின் ஐயுருபு ஆறனுருபாகத்திரித்துரைக்கப்பட்டது. சுரபூபதியை மேருவை என ஐகாரத்தைக்கூட்டி, அதற்கியையப் பொருள்கூறினுமாம். (உஉ)

அடியைக் குறியா தறியா மையினுன்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேள் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே.

இ—ள்: வடி விக்ரம வேல் மகிபா—கூர்மைபொருந்திய வீரத்தன்மை மிக்கவேற்படையையுடைய தலைவரே, குற மின் கொடியை புணரும் குண பூதரனே—வேட்டுவப்பெண்ணாகிய வள்ளிநாயகியைக் கூடிய குணமலையே, அடியை குறியாது—உமது திருவடிகளை நினையாமல், அறியாமையினால்—அஞ்ஞானத்தினால், முடிய கெடவோ—முற்றுமழிவேனே, முறையோ முறையோ—இது நீதியாகுமா நீதியாகுமா (ஆகாதே).

ஓகாரங்கள் இரக்கம். மின் கொடி இரண்டும் உவமவாகுபெயர்கள். அளக்கலாகாவளவும் பொருளுந் துளக்கலாகாநிலையுந் தோற்றமும் வறப்பினும் வளந்தரும் வண்மையுமுடைமைதோன்றக் குணபூதரனே என்றார். குணபூதரன்-குணத்தால் மலைபோல்வான். (உங)

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே.

இ—ள்: சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும் போர் வேல—சூரபன்மனது மாமரவடிவத்தினடியையும் கிரவுஞ்சமலையையும்பிளந்த நீண்ட போருக்குரிய வேலாயுதத்தையுடையவரே, புரந்தர பூபதியே-இந்திரனுக்குத்தலைவரே, கூர் வேல் விழி மங்கையர் கொங்கையில் சேர்வேன்—கூர்மைபொருந்திய வேற்படையையொத்த கண்களையுடைய பெண்களதுதனங்களில் மனம் வைப்பவனாகிய சிறியேன், அருள் சேரவும் எண்ணுமதோ—அவற்றை வெறுத்தோரால் பெறற்பாலதாகிய உமதருளைப்பெறவும் நினைப்பதுண்டா? (இல்லையே).

சேர்வேன்-வினையாலணையும் பெயர். வேர்-இலக்கணை. உம்மை எச்சத்தோடு பொருந்தாமையையுமுணர்த்திநின்றது. (௨௪)

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ வடியே னலையத் தகுமோ
கையோ வயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே.

இ—ள்: கையோ அயிலோ கழலோ முழுதும் செய்யோய்—திருக்கரங்களும் வேற்படையும் பாதங்களும் மேனிமுழுவதும் சிவப்புநிறமானவரே, மயில் ஏறிய சேவகனே—மயில்வாகனத்திலேறியருளிய வீரரே, அடியேன்-சிறியேன், வெவ் வினை வாழ்வை—கொடியதீவினையினாலான இவ்வாழ்வை, மெய் என உகந்து—உண்மையென்று விரும்பி, அலைய தகுமோ—அலைவது தக்கதா, ஐயோ—இது பரிதாபம்.

மெய்யே என்பதில் ஏ அசை. தகுமோ என்பதில் ஓ இரக்கம்; கையோ முதலியவற்றில் எண். (௨௫)

ஆதா ரமிலே னருளைப் பெறவே
நீதா னொருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவிநோ தமனா
தீதா சுரலோ கசிகா மணியே.

இ—ள்: வேத ஆகம ஞான விநோத—வேதங்களாலும் ஆகமங்களாலும் உண்டாகின்ற ஞானத்தினால் ஆராயப்படுபவரே, மன அதீதா—மனத்துக்கு எட்டாதவரே, சுர லோக சிகா மணியே—தேவலோகத்திற்குத் தலைவரே, ஆதாரம் இலேன்—பற்றுக்கோடில்லாதவனாகிய யான், அருளை பெற-

உம்முடைய அருளைப் பெறும்படியாக, நீ—நீர், ஒரு சற்றும்நினைக்கிலையே—சிறிதாயினும் நினைத்திலீரே.

தான்—சாரியை. ஒரு—சிறுமையின் சிறுமையையுணர்த்தற்கண் வந்தது.

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயா
னென்னே வினையின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே.

இ—ள்: பொன்னே—பொன்னையொத்தவரே, மணியே—மாணிக்கத்தையொத்தவரே, பொருளே—உண்மைப்பொருளே, அருளே—அருள் வடிவினரே, மன்னே—இறைவரே, மயில் ஏறிய வானவனே—மயில்வாகனத்திலேறிய கடவுளே, மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான்—மின்னலையேநிகர்த்த உலகவாழ்வை விரும்பிய சிறியேன், என்—என்ன பயன் படுவேன், வினையின் பயன் இதுவோ—யான் முற்பிறப்பிற்செய்த வினையின் பயன் இதுவேயோ.

பயனாகிய காரியத்தாற் காரணத்தின்றீமை அநுமானிக்கப்படுகின்றதென்பதாம். இங்கு-அசை. மின்னேயென்பதில் ஏகாரம் வாழ்வின் அநித்தியத்தைத்தேற்றிநின்றது. என்னேயென்பதில் ஏ இரக்கம். ஓவும் இரக்கம். பொன் மணி என்பன தலைமைபற்றிவந்த உவமவாகுபெயர்கள். (௨௭)

ஆறா வமுதே யயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமே
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.

இ—ள்: ஆறா அமுதே—(வேண்டிய இயல்பினின்று) சிறிதுங்குறையாத அமிர்தம் போன்றவரே, அயில் வேல் அரசே—கூர்மைபொருந்திய வேற்படையையுடைய இறைவரே, ஞான ஆகரனே—ஞானத்துக்கு உறைவிடமானவரே, தற்பரம்—பிரமமானது, யான் ஆகிய என்னை விழுங்கி—யானென்று நினைத்துக் கொண்டிருக்கிற(சீவான்மாவாகிய)என்னை உள்ளடக்கி, வெறும் தான் ஆய் நிலைநின்றது—எல்லாந்தானேயாய் நிலைத்துநின்றதன்மை, நவில தகுமே—சொல்லத்தகுந் தரத்தினதா.

அநுபவத்தாலுணரற்பாலதன்றி வாயாற் சொல்லுந்தரத்தினதன்று என்பதாம். ஆறா- ஹானி என்னும் வடசொல்லடியாகப்பிறந்த ஈறுகெட்டபெயரெச்சம். அமுது அமிர்தமென்னும் வடமொழியின் திரிபு; ஆகுபெயர். தகுமே என்பதில் ஏகாரம் வினா. (௨௮)

இல்லே யெனுமா யையிலிட் டனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலையே

மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே.

இ—ள்: மல்லேபுரி பன்னிரு வாகுவில்-மற்போரையே விரும்புகின்ற பன்னிரண்டு திருப்புயங்களிலும், என் சொல்லே புனையும்- சிறியேனது பாமாலையையே புனைந்திருக்கின்ற, சுடர் வேலவனே—ஒளி பொருந்திய வேற்படையையுடைய கடவுளே, நீ—நீர், இல் எனும் மாயையில் இட்டனை—பொய்த்தோற்றமாகிய பிரபஞ்சத்தில் என்னை அகப்படுத்தினீர், பொல்லேன் அறியாமை பொறுத்திலையே— பாவியேன் அறியாமையினாற் செய்த குற்றங்களைப் பொறுத்தருளாது விட்டீரே! (யானென்செய்வேனென்பது இசையெச்சம்).

ஏகாரம் இல்லேஎன்பதில் அசை; பொறுத்திலையே என்பதில் இரக்கம்; மல்லே என்பதில் புயங்களின் வீரத்திறத்தையும் சொல்லே என்பதில் நூலாசிரியாது கவித்தொண்டின் திறத்தையும் விளக்கி நின்றமையால் தேற்றம். பிரபஞ்சவாழ்க்கைக்குக் கானல்நீர் கயிற்றரவம் கனவுலகம் நின்றற்றொடக்கத்தனவாய உவமைகளை அறிவுடையோர் தத்தம் பக்குவ நிலைக்கேற்றவாறு கூறுதலின்'இல்லே யெனுமாயை' என்றார். யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராதலின் என மெய்கண்டார் கூறியதன் குறிப்பும் இதுவே. (உக)

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா ததெனு வுணர்வித் ததுதா
னவ்வா றறிவா ரறிகின் றதலா
லெவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே.

இ—ள்: செவ் வான் உருவில் திகழ் வேலவன்—செக்கர்மேகம்போன்றதோற்றத்துடன் விளங்குகின்ற முருகக்கடவுள், அன்று—அந்நாளில், ஒவ்வாதது என உணர்வித்தது—வாயாற்சொல்லமுடியாததென்று காட்டிய மவுனநிலையை, அவ்வாறு அறிவார் அறிகின்றது அலால்—அவர் காண்பித்தபடியே அறியத்தக்கவர் அறிந்துகொள்வதன்றி, ஒருவர்க்கு இசைவிப்பது எவ்வாறு—வேறொருவர்க்கறிவிப்பதெப்படி.

அவருணர்த்த உணர்வதேயன்றிப் பிறிதோராற்றானுமுணர்தல் கூடாதென்பதாம். வேலவன்-வேற்படையையுடையான். அன்றென்பது முருகவேள்தமக்கு அருள்செய்யப்படி பிரசன்னமானதினத்தை. மேனிமுழுதுஞ் சிவப்புநிறமாதலாற் செக்கர்மேகத்தையுவமித்தார். (௨0)

பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே.

இ—ள்: மயில் வாகனனே—மயிலை வாகனமாகவுடைய கடவுளே, பாழ் வாழ்வு எனும் இ படு மாயையில் — பயனற்றவாழ்க்கையாகிய இந்தப் பெரிய மாயையினுள், வீழ்வாய் என—அகப்படுவாயென்று, என்னை விதித்தனையே-எனக்கு நிபந்தனைசெய்தீரே, செய்தன தாழ்வு ஆனவை உளவோ-சிறியேன் அதற்குக்காரணமாகச் செய்த தீவினைகள் எவையேனும் உள்ளனவா, இனி நீ வாழ்வாய்—(எனது ஈடேற்றத்தைத் தடுத்தமையால்) இனி நீர் வாழ்ந்திருப்பீர்.

படுமாயை-இடைவிடாது நீங்குபயக்கும் மாயை. ஈண்டுப்படுதல்—தன்னியல்புமுழுதுங் குறைவறநிறைதல். பிறனுக்குக்கேடுசூழ்தல் தனது ஆக்கத்தை நினைந்தாதலின் 'வாழ்வாயினிநீ' என்றார். (௩௧)

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே.

இ—ள்: கொலையே புரி வேடர் குல பிடி தோய் மலையே-கொலைத் தொழிலையேவிரும்பிச்செய்கின்ற வேடுவர்களது சாதியிற்பிறந்த வள்ளிநாயகியைச்சேருகின்ற கடவுளே, மலை கூறு இடு வாகையனே— கிரவுஞ்சமலையைப்பிளந்த வீரரே, கலையே பதறி கதறி தலையூடு அலைபடும் ஆறு அது— (கடவுளினியல்பைவிளங்கக்கூறுவனவாகிய வேதமுதலிய) நூல்களே வரையறுக்குமாற்றலில்லாதனவாய்ப் பலபடக்கூறி முடிவில் அலைவுபட்டுக்கிடக்குந்தன்மை, வாய்விடவோ—வாயாற்சொல்லமுடியுமா (முடியாதே).

வேதமுதலிய நூல்களாலுங் கூறிமுடித்தற்கரியதாய உமது பெருமையைச் சிறியேன் வாயினாற்பாடிமுடிப்பதெவ்வாறென்பது குறிப்பு.

பிடி மலை என்பன ஆகு பெயர்கள். ஏகாரம் கலையே என்பதிற் சிறப்பு; கொலையே என்பதிற் பிரிநிலை. ஊடு-ஏழனுருபு. (௩௨)

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே.

இ—ள்: மந்தாகினி தந்த வர உதயனே— கங்கைநதிபெற்ற கடவுளே, கந்தா—கந்தவேளே, முருகா—முருகமூர்த்தியே, கருணா ஆகரனே—அருளுக்குஉறைவிடமானவரே, சிந்தா ஆகுல இல் ஒடு—மனத்திற்குத்துன்பத்தைத்தருகின்ற மனையாளும், செல்வம் எனும்—செல்வமுமென்று சொல்லப்படுகின்ற, விந்த அடவி—பெருங்காட்டை, என்று விட பெறுவேன்-எந்நாளில் யான் நீங்கப்பெறுவேன்.

சிந்தாகுலம் கருணாகரன் வடநூன்முடிபு. விந்தாடவி-விந்தமலையிலுள்ள காடு; இலக்கணை. வரோதயன்-மேலான நிகழ்ச்சியையுடையான். நிகழ்ச்சி-பிறப்பு குணம் தொழில் முதலியன. பரமசிவனது நெற்றிக்கண்களினின்றுதோன்றிய பொறிகளாறும் கங்கைநதியிற்சேர்க்கப்பட்டவுடன் ஆறு குழந்தைகளாகிப்பின் உமையம்மையாரால் ஒருருவாக்கப்பெறுதலின் 'மந்தாகினி தந்தவரோதயன்' என்றார். காங்கேயனென்னுந் திருநாமமும் இது பற்றியேயுண்டாயிற்று. கடவுளிடத்தே செல்லவிடாது உலகவின்பத்தில் மனத்தைப்பதித்தலின் 'சிந்தாகுலவில்' எனவும், சிங்கம் புலி கரடி முதலிய மிருகங்கள் செறியப்பெற்றதும் மிகுந்தபரப்பினையுடையதுமாகிய காடென்பது தோன்ற 'விந்தாடவி' எனவும் கூறினார். பெருந்துன்பத்தைத்தருவதும் நீங்குதற்கரியதுமாதலின் பிரபஞ்சத்தைக்காடாக ரூபித்தார். (௩௩)

சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரந் தருவாய்
சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே.

இ—ள்: சங்க்ராம சிகாவல—போருக்குரிய மயில்வாகனத்தையுடையவரே, சண்முகனே—ஆறுமுகக்கடவுளே, கங்காநதி பால—கங்கைநதியின் குமாரரே, க்ருபா கரனே— அருளைச்செய்பவரே, சிங்கார மடந்தையர் தீநெறி போய் மங்காமல்— காமச்சுவையையுதிப்பிக்கின்ற மங்கையர்களை விரும்புதலாகிய துன்மார்க்கத்திற்சென்று கெடாமல், எனக்கு வரம் தருவாய்—சிறியேனுக்கு அருளைச் செய்வீர்.

சிங்காரம்-சிருங்காரம் என்னும் வடமொழியின் விகாரம்; அது எண்வகைச்சுவைகளிலொன்றாம். தீநெறியென்றது-உலகாயதமதத்தை. சிகாவலம்-மயில். சங்க்ராமம் க்ருபாகரன்-என்பன வடமொழியிற்போல இகரவுயிரைப்பெறுதுநின்றன. கங்காநதி-வடமொழிச்சந்தி. (௩௪)

விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
றுதியா விரதா சுரபூ பதியே.

இ—ள்: மதி வாள் நுதல் வள்ளியை அல்லது—எண்ணாட்டிங்களை நிகர்த்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய வள்ளிநாயகியை மாத்திரமன்றி, பின் துதியா—வேறொருவரையுந்துதிக்காத, விரதா—நியமத்தையுடையவரே, சுர பூபதியே—தேவர்களுக்குத்தலைவரே, விதிகாணும் உடம்பை விடா வினையேன்—விதியினால்விளைந்த இந்தச்சரீரத்தை விட்டகலாதிருக்கின்ற பாவியேன், கதி காண—நற் கதியைப்பெறும்படி, மலர் கழல் என்று அருள்வாய்—தாமரைமலர்போன்றதிருவடிகளை எந்நாளிற்காட்டியருள்வீர்.

விதி-முற்பிறவியிற்செய்த வினைகளால் இப்பிறவியிலேற்படும் அநுபவநியதி. இவ்வுலகவாழ்வின் வெறுப்புத்தோன்ற 'உடம்பைவிடாவினையேன்' என்றார். (ருரு)

நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருடான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே.

இ—ள்: வேதா முதல் விண்ணவர் சூடும் மலர் பாதா—பிரமாமுதலிய தேவர்களால் முடிமேற் சூடப்பெறுகின்ற தாமரைமலர்போலுந் திருவடிகளையுடையவரே, குறமின் பத சேகரனே—வள்ளிநாயகியின் பாதங்களைச் சிரமேற்சூடியவரே, அரனார்—சிவபிரானார், நாதா குமரா நம என்று—தலைவரே குமாரமூர்த்தியே வணக்கமென்று உய்மைத்துதித்து, ஓதாய் என—உபதேசிப்பீரென்று கேட்க, ஓதியது எ பொருள்—அவருக்குபதேசித்தது எந்தப்பொருளை? (அதனைச்சிறியேனுக்கும் உபதேசஞ்செய்வீரென்பதாம்).

குறமின்-வேட்டுவப்பெண். ஆர் உயர்வு குறித்து நின்றது. (ருசு)

கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவா
லரிவா யடியோ டுமகந் தையையே.

இ—ள்: மனனே—என் மனமே, கிரி வாய் விடு விக்ரம வேல் இறையோன் பரிவாரம் எனும் பதம் மேவலையே—கிரவுஞ்சமலையின்மேலே வியவீரச்செயலையுடைய வேற்படையையேந்திய முருகக்கடவுளின் அடிமையென்று சொல்லத்தக்க நிலையைப் பொருந்துதலையே, புரிவாய்—விரும்புவாய், பொறை ஆம் அறிவால்—பொறுமைபொருந்திய ஞானத்தால், அகந்தையை—அகங்காரத்தை, அடியோடும் அரிவாய்—முற்றுநீக்குவாய்.

அகங்காரத்தைநீக்கிக் கடவுளுக்கு அடிமையாவாய் என்பதாம். வாய்-ஏழனுருபு. உம்-சாரியை. (ருஎ)

ஆதா ளியையொன் றறியே னையறத்
தீதா ளியையாண் டதுசெப் புமதோ
கூதா ளகிரா தகுலிக் கிறைவா
வேதா ளகணம் புகழ்வே லவனே.

இ—ள்: கூதாள கிராத குலிக்கு இறைவா—கூதாளமலரையணிந்த வேடர்குலத்தவளாகிய வள்ளிநாயகிக்குத் தலைவரே, வேதாள கணம் புகழ்

வேலவனே—பூதகணத்தவராற் புகழப்படுகின்ற வேற்படையையுடைய பெருமானே, ஆதாளியை—குற்றமுள்ளவனும், ஒன்று அறியேனை—ஒன்றையுமறியாதவனும், அற தீது ஆளியை—மிகவும் தீமையுடையேனுமாகிய என்னை, ஆண்டது—அடிமைக்கொண்டது, செப்பும் அதோ—சொல்லுந்தரத்தினதா (இல்லையே).

மிகுந்த ஆச்சரியமென்பதாம். ஆதம் ஆளி என்பது மகரமெய் கெட்டு வடசொற்போலத் தீர்க்கசந்திபெற்றது. ஒன்றுமென்பதிற் சிறப்பும்மைதொக்கது. கூதாளம்-குறிஞ்சிநிலத்திலுண்டாகும் ஓர் வகைச்செடி. குலமென்னுஞ் சொல் ஈற்றுயிருமெய்யுங் கெட்டுப் பெண்பாலுணர்த்தும் இவிகுதியோடுமுடிந்தது. (௪௮)

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவசங் கரதே சிகனே.

இ—ள்: கோவே—இறைவரே, குற மின் கொடி தோள் புணரும் தேவே—வேட்டுவகுலத்துதித்த வள்ளிநாயகியின்தோள்களைத் தழுவுகின்ற தெய்வமே, சிவ சங்கர தேசிகனே—சிவபிரானுக்குப் (பிரணவப்பொருளையுபதேசித்தலாற்) குருவானவரே, மா எழ் சனனம் கெட—பெரியனவாகிய எழுபிறப்புக்களும் நீங்கும்படி, மாயை விடா மூ எடணை என்று முடிந்திடுமோ—மாயையினின்றுநீங்காத மூவகையான இச்சைகளும் எந்நாளில் என்னை விட்டகலுமோ (அறியேன்).

சிவசங்கரன் ஒருபொருட்பன்மொழி எழுபிறப்புக்கள்: தேவர் மக்கள் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்பனவாம். அப்பிறப்புக்களொவ்வொன்றும் பலவேறுவகையான யோனிபேதங்களையுடைமையால் 'மாவேழ்சனனம்' என அடைபுணர்த்தினர். தேவர்முதலிய பிறப்புக்களின் யோனிபேதம்; தேவர் பதினொருநூறாயிரமும் மக்கள் ஒன்பதுநூறாயிரமும் விலங்கும் பறவையும் நீர்வாழ்வனவும் தனித்தனிபத்துநூறாயிரமும் ஊர்வன பதினைந்துநூறாயிரமும் தாவரம்பத்தொன்பதுநூறாயிரமும்ஆக எழுபிறப்புக்களுக்குங்கூடியயோனிபேதம் எண்பத்துநான்குநூறாயிரமாம். மாயையோடுசம்பந்தமுள்ளவென்பார் 'மாயை விடா' என்றார். எடணை—வடசொல்; இதைச்சிலர் ஈடணையெனவும் வழங்குவர். வடநூற்பயிற்சியில்லாதார்சிலர் எடணையென்றுவழங்கிய இடங்களில் ஈடணை என்னும் வடசொல்லின்விகாரமெனப் பொருந்தாவிலக்கணங்கூறுவர். எடணைமூன்றாவன: அர்த்தேடணை புத்திரேடணை லோகேடணை என்பனவாம்; அவற்றுள், அர்த்தேடணையாவது: பெருந்தொகையான பொருளையீட்டி வைத்துக்கொண்டால் எல்லாச்சுகங்களையுமடையலாமென்று, அதனையீட்டுதற்கு முயலுதல். புத்திரேடணையாவது: பலபுத்திரரைப் பெற்றுவளர்த்தால் இம்மைமறுமைச் சுகங்களிர

ண்டையும் பெறலாமென்றுநினைத்து மங்கையருடன்கூடிப் புத்திரரைப்பெற்று அவர்மேல் மிகுந்த அன்புடையராய் வேறொன்றிலுஞ்சிந்தைசெலுத்தாதிருத்தல். இதனையொழித்து இதற்கிணையாகச்சிலர் களத்திரேடணையைச் சேர்த்துக்கொள்வர். களத்திரேடணையாலெய்தும்பயன் புதல்வர்ப்பேறேயாதலின், களத்திரேடணை புத்திரேடணையுளடங்குமென்க. லோகேடணையாவது: பலதேசங்களையரசாள அல்லது பலபூமிகளைத் தனதாக்கமுயலுதல். மின்கொடி— மின்னற்கொடிபோல்வாள்; அன்மொழித்தொகை. சிவசங்கர தேசிகனே என மூன்றையும் விளியாக்கி, மங்கலகரமானவரே, சுபத்தைச்செய்பவரே, என்குருநாதரே எனப்பொருள்கூறினுமாம். கெட—காரியப்பொருளதாய்வந்த செயவெனெச்சம். மூன்று எடணை என்பது மூவேடணையெனப்புணர்ந்தது. (௬௯)

வினையோ டவிடுங் கதிர்வேல் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோ டுதிரிந் தவனே.

இ—ள்: சுனையோடு—நீர்ச்சுனைகளிலும், அருவி துறையோடு— மலையருவி வீழுமிடங்களிலும், பசும் தினையோடு—பசுமையாகியதினைப்புனங்களிலும், இதணோடு—பரணுக்குச்சமீபமானவிடங்களிலும், திரிந்தவனே—(வள்ளிநாயகியைத்தேடித்) திரிந்தவரே, வினை ஓட விடும் கதிர் வேல் மறவேன்—தீவினையயகலச்செய்கின்ற ஒளிபொருந்திய வேற்படையை (இடைவிடாது) தியானிக்கின்ற சிறியேன், மனையோடு தியங்கி மயங்கிடவோ—மனைவியரோடு கூடி வாடி மயங்கத்தகுமோ? (தகாதே, ஆதலின் இல்வாழ்விற்புகாதபடி தடுத்து முத்தியின்பத்தையருளுக என்பதாம்).

முத்தியை விரும்புவார்க்குத் தீவினைபோலவே நல்வினையும் விலக்கற்பாலதாதலின், வினையென்பதற்கு இருவினைகளையுங்கூறினுமாம். மனை தினை இதண் என்பன ஆகுபெயர்கள். சுனைமுதலியவற்றோடு புணர்த்திய மூன்றனுருபுகள் ஏழனுருபின்றிரிபு. வள்ளிநாயகி தினைப்புனக்காவலினின்று நீங்கிச் சிற்றூர்க்குச்சென்றபின், அந்நிகழ்ச்சியையறியாதார்போன்று பகற்பொழுதுமுடியும்வரையும் அவர்பயிலுமிடங்களெங்கும் தேடித்திரிந்தாராதலின், 'சுனையோடு.........திரிந்தவனே' என்றார். கதிர்வேல்— கதிர்வடிவான வேலெனினுமாம். (௭0)

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னொபதே சிகனே.

இ—ள்: வாகு ஆம் முருகா—அழகினையுடைய முருகக்கடவுளே, மயில் வாகனனே—மயிலைவாகனமாகவுடையவரே, யோகா—யோகநிட்டையி

ஞானுணரப்படுபவரே, சிவஞான உபதேசிகனே — சிவஞானத்தை உப தேசஞ்செய்பவரே, நமனுர் கலகம் செயும் நாள் — கூற்றுவன் (உயிரைக்கவரு ம்பொருட்டு வந்து) என்னுடன் போராடும்போது, சாகாது — அவனுலிறவா வண்ணம், எனை — அடியேனை, சரணங்களில் — உமது பாதநீழலில்வைத்து, கா கா — காத்தருள்வீர் காத்தருள்வீர்.

கா என்பதில் முன்னிலையேவல் விகுதி புணர்ந்துகெட்டது. கா கா என்ற அடுக்குத் தம்மைக் கைவிடலாகாதென்பதைக்குறித்தது. சிவஞானம் — சிவத்தையுணருமுணர்வு. (சக)

குறியைக் குறியா துகுறித் தறியு
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே.

இ—ள்: குறியை — குறிப்புப்பொருளை, குறியாது குறித்து அறியும் நெறியை — நினைவற்றிருந்தறியப்படுமியல்பினையுடையவரை, தனி வேலை — ஒப்பற்ற வேற்படையை, நிகழ்த்திடலும் — யான் உணர்ந்தவுடன், உல கோடு செறிவு அற்று — பிரபஞ்சத்தோடுகலத்தலொழிந்து, உரை சிந்தையும் அற்று — வாக்கும் நினைவுமொழிந்து, அறிவு அற்று — மனமும் ஒழிந்து, அறி யாமையும் அற்றது — அஞ்ஞானமும் நீங்கியது.

ஆன்மதரிசனமானவுடன் சீவன்முத்தி கைகூடிற்றென்பதாம்.

குறி-ஆகுபெயர். வேதமுதலிய நூல்களினுட் பொருளாய்விளங்குத லின் 'குறியை' எனவும், இவ்வுருவினன் இந்நிறத்தினன் என்றற்றெட்டக்கத் தனவாகிய பாவனைகளின்றி நிட்டைநிலையிலிருந் துணரவேண்டுதலின் 'குறியாது குறித்துணருநெறியை' எனவும் கூறினர். உம்மை உரைக்குங்கூட் டப்பட்டது. (சஉ)

தூசா வணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா வநுபூ திபிறந் ததுவே.

இ—ள்: அணியும் துகிலும் தூசு ஆ புனைவாள் நேசா — ஆபரணத்தை யும் வஸ்திரத்தையும் அழுக்குற்றனவாகத் தரிப்பவராகிய வள்ளிநாயகியின் கணவரே!, முருகா — முருகக்கடவுளே, நினது அன்பு அருளால் — உம்மு டைய அன்போடுகூடிய கருணையினால், ஆசா நிகளம் துகள் ஆயின பின் — ஆசையாகிய விலங்கு அழிந்தபின், பேசா அநுபூதி பிறந்தது — மௌனநிலை யாகிய செல்வம் என்னிடத்துத்தோன்றியது.

ஆசாநிகளம்-வடநூன்முடிபு. அணிகளிலும் ஆடையிலும் அழுக்குப் படிந்திருத்தல் வேடர்க்கியல்பு; இவ்வாறன்றி, தூசா என்பதற்கு அழுக்கெ ன்னும்படியாக (இபற்கையழகிற்கு மிகையாக) என்றுரைகூறினுமாம். பேசா

வநுபூதியென்பதற்குப் பிறர்க்குச்சொல்லுதற்கரியதாகிய பேரின்பமெனப் பொருள்கூறுவதுமொன்று. அநுபூதிஎன்னுஞ்சொல்லின்விளக்கத்தை இப்புத்தகமுகவுரையிற்காண்க. முத்திக்குத்தடையாய்நிற்றலின் ஆசையை விலங்காக உருவகித்தார். (௪௩)

சாடுந் தனிவேன் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே.

இ—ள்: சாடும் தனி வேல் முருகன்—(சூரபன்மன்முதலிய அசுரரைப் போரில்) அழித்த ஒப்பற்றவேற்படையையுடைய முருகவேள், வீடும் சுரர் மா முடியும்— (தங்கள் தங்கள் ஆயுள்முடிந்தவுடன்) இறப்பவர்களாகிய தேவர்களது சிறந்ததலைகளும், வேதமும்—இருக்குமுதலிய வேதங்களும், வெம் காடும்—கொடிய காடும், புனமும்—தினைப்புனமும், கமழும்—கமழுகின்ற, கழல்—திருவடிகளை, சரணம் சூடும் படி—தஞ்சமாகச் சிரமேற்சூடும்படி, தந்தது—அருள்செய்த தன்மை, சொல்லும் அதோ—சொல்லத்தகுமியல்பினதா (அன்று).

திருவடிகளின் பெருமையையுந் தமது சிறுமையையும்விளக்கியவாறு. உம்மை முடிக்குங் கூட்டப்பட்டது. பலகாற்பணிதலாலும் துதித்தலாலும் கடத்தலாலும் முறையே முடியும் வேதமும் பிறவுங் கமழ்வனவென்க. கடந்து செல்லற்கரியதாம் துட்டமிருகங்கள்சஞ்சரிக்கப்பெற்றதுமான காடென்பார், "வெங்காடு" என்றார். 'வீடுஞ்சுரர்மாமுடி......கமழுங்கழல்' என்றதனால், குமரவேள் அறுதியாய் நிற்குங்கடவுளென்பது குறிக்கப்பட்டது. (௪௪)

கரவா கியகல் வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோ கதயா பரனே.

இ—ள்: குரவா-குருநாதரே, குமரா—முருகவேளே, குலிச ஆயுத—குலிசப்படையையுடையவரே, குஞ்சரவா— தெய்வயானையை மணஞ்செய்தவரே, சிவ யோக தயாபரனே—சிவயோகத்தை யருளுங்கடவுளே, கரவு ஆகிய கல்வி உளார் கடை சென்று இரவா வகை—மறைத்தலாகிய பயிற்சியையுடைய உலோபர்களது வீட்டுவாயிலிற்போய் யாசகஞ்செய்யாவண்ணம், மெய்ப்பொருள் ஈகுவையோ — உண்மைஞானத்தைச் (சிறியேனுக்கு) அருள்வீரா.

கரவு-தம்மிடத்துள்ளபொருளைப் பிறரறியாவண்ணம் மறைத்து இல்லையென்று சாதித்தல். இதனை நன்குபயின்றாரென்பார் 'கரவாகிய கல்வியுளார்' என்றார். ஓ-விதை. குஞ்சரவா என்பதற்கு யானைவாகனத்தையுடைய

வரே என உரைப்பினுமாம். சிவயோகம்-சிவத்தைத்தெரிவிக்கின்ற யோகம், சிவத்துடன்கூடுதலாகிய யோகமெனினுமாம். (௪௫)

எந்தா யுமெனக் கருடந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாண்
மைந்தா குமரா மறைநா யகனே.

இ—ள்: கந்தா—கந்தவேளே, கதிர் வேலவனே—ஒளிபொருந்திய வேற்படையையுடையவரே, உமையாள் மைந்தா—உமாதேவியின் குமாரரே, குமரா—குமாரக்கடவுளே, மறை நாயகனே—வேதங்களுக்குத்தலைவரே, என் தாயும் எனக்கு அருள் தந்தையும் நீ—என்னுடையதாயும் எனக்கு அருள்செய்கின்ற தகப்பனும் நீரே (ஆதலின்), சிந்தா ஆகுலம் ஆனவை தீர்த்து எனை ஆள்—மனத்திலுள்ள துன்பங்களை நீக்கி என்னை அடிமைக்கொள்வீர்.

சிந்தாகுலம்-வடநான்முடிபு. என்தாய்-அடிநோக்கித் திரிந்தது. (௪௬)

ஆறா றையுநீத் ததன்மே னிலையைப்
பேறா வடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே.

இ—ள்: சீறா வரு சூர் சிதைவித்து—கோபித்தெதிர்த்துவந்த சூரபன்மனையழித்து, உலகம் இமையோர் கூறு ஆ குளிர்வித்தவனே—சுவர்க்கலோகத்தைத் தேவர்களுக்குரியதாக்கி மகிழ்வித்தவரே, ஆறாறையும் நீத்து—முப்பத்தாறுதத்துவங்களையும் நீக்கி, அதன் மேல் நிலையை—அந்தத்தத்துவங்களுக்கப்பாற்பட்டு நிற்குநிலையை, பேறு ஆ அடியேன் பெறுமாறு உளதோ-பெறுபேறாகச் சிறியேன் பெற்றுக்கொள்ளும் வழியுண்டா, (அப்பேற்றை விரைவில் அருள்செய்வீரென்பதாம்).

ஆறாறு—ஆறுஞ் ஆறும் புணர்ந்த ஆறு. ஆறாறையும் என்றது: ஈண்டு, சைவசித்தாந்திகள்கூறும் முப்பத்தாறு தத்துவங்களை. அவையாவன: ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்தும் ஆம். ஆன்மதத்துவம்இருபத்துநான்காவன: பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பூதங்களைந்தும், சுரோத்திரம் துவக்கு சட்சு சிருவை ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியங்களைந்தும், சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் என்னுந் தன்மாத்திரைகளைந்தும், வாக்கு பாதம் பாணி பாயு உபஸ்தம் என்னும் கருமேந்திரியங்களைந்தும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் நான்குமாம். வித்தியாதத்துவம் ஏழாவன: காலம் நியதி கலை வித்தை இராகம் புருடன் மாயை என்பனவாம். சிவதத்துவம் ஐந்தாவன: சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்பனவாம். வேதாந்திகள் தத்துவங்களின் தொகையைத் தொண்ணூற்றாறென்பர். இங்கே கொள்ளப்படுஞ் சிவதத்துவங்கள் சீவான்மாவுள் அடங்கியவற்

றையே குறித்தனவாம். பதிப்பொருளின் றத்துவமுழுவதையுமடக்கினவல்ல. அதன்மேனிலையென்றது, முன்கூறிய முப்பத்தாறுதத்துவங்களுக்குமப்பாலாய் வாக்குமனோதீதமாய் ஞானமேவடிவாயிருக்கும் நிலையை. (௪௭)

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே.

இ—ள்: செறிவு ஒன்றற வந்த இருள் சிதைய—ஞானங் குறைவின்றிப் பொருந்துதலால் அஞ்ஞானங்கெட, வெறி வென்றவரோடு உறும் வேலவனே—காமமுதலிய துர்ச்செயல்களின் வயத்தராதலையொழித்த பெரியோருடன் பயின்றிருக்கின்ற கடவுளே, அறிவு ஒன்று அற நின்று அறிவார் அறிவில்—மனம் ஒன்றையும் பற்றாதநிலையில்நின்று உம்மை யுணருகின்ற ஞானிகளது உள்ளத்தில், பிறிவு ஒன்றற நின்ற பிரான் அலையோ—பேதமொன்றுமின்றி நின்றபெருமான் நீரல்லீரோ.

வந்து என்னுமெச்சம் ஏதுப்பொருட்டு. சிதைய வென்றவர் என இயையும். (௪௮)

தன்னந் தனிநின் றதுதா னறிய
வின்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே.

இ—ள்: மின்னும் கதிர் வேல் விகிர்தா—ஒளியைப்பரப்புகின்ற கதிர்களையுடையவேலாயுதத்தையேந்திய கடவுளே, நினைவார் கின்னம் களையும் க்ருபை சூழ் சுடரே, தியானிப்பவர்களுடைய துன்பத்தை நீக்குகின்ற அருள் மிகுந்தசோதியே, தன்னந்தனி நின்றது—நீர் தத்துவாதீதராய்நின்றநிலையை, அறிய—அறியும்படி, இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ—(தமியேனைப்போன்ற அபக்குவியான)வேறொருவருக்கு உணர்த்துவதுண்டா.

முருகவேள் தமக்கு அருள்செய்தமையைப் புகழ்ந்துகூறினார். தான்-சாரியை. விகிர்தன்-தத்துவங்களின்பாற்பட்ட பலவகையான விகாரங்களைச் செய்பவர். (௪௯)

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே.

இ—ள்: நதி புத்திர—கங்கைநதியின் புதல்வரே, ஞான சுக-ஞானவின்பத்தைத்தருபவரே, அதி பவ திதிபுத்திரர் வீறு அடு சேவகனே—பெரும்பாவங்களைச்செய்த சூரபன்மன்முதலிய அசுரர்களது தருக்கையழித்த வீரரே, மதி கெட்டு—புத்தியானது கெடப்பெற்று, அற வாடி மயங்கி—மிகவும்

சோர்ந்து மயங்கி, அற கதி கெட்டு—தருமநெறியினின்றும் தவறி, அவமே கெட கடவேனோ—வீணாகச்சிறியேன் கெடத்தகுவேனோ.

மதிக்குக்கெடுதல் துன்மார்க்கங்களிற்செல்லுதல். ஓ—எதிர்மறை. ஞான சுக அதிப-எனப்பிரித்து ஞானசுகத்தைத்தருந்தலைவரே எனப்பொருள் கூறினுமாம். (௫௦)

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

இ—ள்: உருஆய் அருஆய்—உருவப்பொருளாயும் அருவப்பொருளாயும், உளது ஆய் இலது ஆய்—உள் பொருளாயும் இல் பொருளாயும், மரு ஆய் மலர் ஆய்—மணமாயும் மணத்துக்காதாரமாகியபூவாயும், மணி ஆய் ஒளியாய்—இரத்தினமாயும் அவ்விரத்தினத்திலுள்ள ஒளியாயும், கரு ஆய் உயிர் ஆய்—உடலாகியும் உடலினுள்ளிருக்கும் உயிராகியும், கதி ஆய் விதி ஆய்—முத்தியாயும் விதியாயும் நின்று, குரு ஆய் வருவாய்— அடியார்முன்னிலையிற் குருமூர்த்தியாயும் வருபவரே, குகனே—உள்ளக்குகையிலிருப்பவரே, அருள்வாய்- அடியேனுக்கு அருள் செய்வீர்.

கரு ஆகுபெயர். உருவாயருவாயுளதாயிலதாய் என்றதன் விரிவு கூஞ் செய்யுளினுரையால் விளங்கத்தக்கது. (௫௧)

கந்தரநுபூதியுரை முற்றிற்று.